# அலெக்சாண்டர் கிரஹாம் பெல்

ஆங்கிலத்தில் : எலிசபெத் மேக்லியோட்

படங்கள்: ஆண்ட்ரே கிறிஸ்டோஃபர்ஸ்கி



தமிழில்: குமரேசன் முருகானந்தம்

# அலெக்சாண்டர் கிரஹாம் பெல்

ஆங்கிலத்தில்: எலிசபெத் மேக்லியோட்

படங்கள்: ஆண்ட்ரே கிறிஸ்டோஃபர்ஸ்கி

தமிழில்: குமரேசன் முருகானந்தம்



அடுத்த முறை நண்பரை அழைக்க தொலைபேசியை எடுக்கும்போது, **அ லெ க் சா ண் ட ர் கி ர ஹா ம் பெ லு க் கு** நன்றி சொல்லுங்கள். அவர் 130 ஆண்டுகளுக்கு முன்பு தொலைபேசியைக் கண்டுபிடித்தார்.

அலெக்சாண்டரின் கண்டுபிடிப்பு உலகை மாற்றியமைத்தது! இது உங்களுக்கு குடும்பத்தினருடனும் நண்பர்களுடனும் தொடர்பில் இருக்க உதவுகிறது. உங்களுக்குத் தேவையானவற்றை தொலைபேசியில் ஆர்டர் செய்யலாம். யாராவது உடல்நலமில்லாமல் இருந்தால், நீங்கள் தொலைபேசி மூலம் உதவியை வேண்டிப் பெறலாம்.



அ லெ க் ஸா ண் ட ர் - அவரது குடும்பத்தினரால் அ லெ க் என்று அழைக்கப்பட்ட அவர் - 1847 இல் ஸ்காட்லாந்தில் பிறந்தார். அவரும் அவரது சகோதரர்களான மெ ல் வி ல் லே மற்றும் எ ட் வ ர் டு ம் விளையாடுவதையும் புதிதாக எதையாவது கட்டமைப்பதையும் வேடிக்கையாக கொண்டிருந்தனர். அவர்கள் ஒருமுறை பேசும் பொம்மையைக் கண்டுபிடித்தார்கள், அது மிகவும் அசலான ஒலி எழுப்பிய அது, அண்டை வீட்டார் ஒருவரை ஏமாற்றியது!





அ லெ க் ஒலி மற்றும் கண்டுபிடிப்பில் ஆர்வம் காட்டியதில் ஆச்சரியமில்லை. அவனது தாயாருக்கு காது கேட்பதில் குறைபாடு இருந்தது. மேலும் அ லெ க் கின் தந்தை பேச்சு சிகிச்சை ஆசிரியராக இருந்தார். அவர் பேச்சு குறைபாடு உள்ளவர்கள் தெளிவாக பேச கற்றுக்கொள்ள உதவினார். அ லெ க் கின் அப்பா காது கேளாதவர்கள் பேச கற்றுக்கொள்ள உதவும் ஒரு வழிமுறையையும் கண்டுபிடித்தார்.



**அ லெ க்** கிற்கு 21 வயதாக இருந்தபோது, அவர் தனது தந்தையைப் போலவே பேச்சு ஆசிரியராகவும் ஆனார். **அ லெ க்** பல காது கேளாத குழந்தைகளுக்கு எப்படி பேசுவது என்று கற்றுக் கொடுத்தார்.

காது கேளாத குழந்தைகளுக்கு எப்படி பேசுவது என்று கற்றுக்கொள்வது கடினம். மற்றவர்கள் சொல்வதைக் கேட்டு அவர்களால் வார்த்தைகளைக் கற்றுக்கொள்ள முடியாது. அவர்கள் வார்த்தைகளை சரியாகச் சொல்கிறார்களா என்றும் அவர்களால் கேட்க முடியாது.

**அ லெ க்** தனது மாணவர்களுக்கு கற்பிக்க பல்வேறு வழிகளைக் கண்டுபிடித்தார். உதாரணமாக, **அ லெ க்** ஒரு வார்த்தையைச் சொல்லும்போது குழந்தைகள் அவரின் தொண்டைப் பகுதியில் விரல் வைத்தார்கள். அந்த வார்த்தையைச் சொல்லும்போது அவர்களின் தொண்டை எப்படி நகர வேண்டும் என்பதை குழந்தைகளால் உணர முடிந்தது.



அ லெ க் 23 வயதாக இருந்தபோது, அவரது சகோதரர்கள் இருவரும் சுவாசத்தை மிகவும் கடினமாக்குகிற ஒரு நோயால் இறந்துவிட்டனர், பின்னர் அ லெ க் கிற்கும் அதே நோய் வந்தது. அ லெ க் கின் பெற்றோர் அவரை சுத்தமான காற்று கிடைக்கும் எங்காவது ஓரிடத்திற்கு குடிபெயர முடிவு செய்தனர். அது அவரது உயிரைக் காப்பாற்றும் என்று அவர்கள் நம்பினர். 1870 ஆம் ஆண்டில், பெ ல் குடும்பத்தினர் க ன டா வின் ஒ ன் டா ரி யோ வின் பி ரா ண் ட் போ ர் டு க்கு இடம் பெயர்ந்தனர்.





இங்கே, அ லெ க் பெரும்பாலான நேரம் ஓய்வெடுத்துக்கொண்டிருந்தார். ஆனால் ஒலியைப் பற்றி மேலும் அறிய அவர் சோதனைகளையும் செய்தார். மணிக்கணக்கில், அ லெ க் பாட்டுப்பாடி தனது பியானோவில் இசையாமத்தவாரிருந்தார். அப்போது, பியானோவின் உள்ளே தந்திக்கம்பிகள் ஒலிஎழுப்பின. அ லெ க் அது ஏன் என்று சிந்திக்கலானார்.



விரைவிலேயே, அ லெ க்  மீண்டும்
ஆரோக்கியமடைந்தார். அமெரிக்காவில் காது
கேளாத குழந்தைகளுக்கான பள்ளியில் அவருக்கு
வேலை கிடைத்தது. விரைவில் அவர்
மா சா சூ செ ட் ஸி ன் பா ஸ் ட னு க்கு
பயணப்பட்டார்.
அ லெ க்  கற்பித்தலை மிகவும் விரும்பியதால்,
மிகவும் மகிழ்ச்சியடைந்தார். பா ஸ் ட னி ல்  பல
அறிவியலறிஞர்கள் இருப்பதை அவர் அறிவார்.
அவர் ஒலி பற்றிய தனது சோதனைகளைக்
குறித்து அவர்களிடம் பேச விரும்பினார்.





பா ஸ் ட னி ல் , அ லெ க் பள்ளியில் கற்பிக்கத் தொடங்கினார். சில நேரங்களில் மாணவர்கள் சரியாக ஒலி எழுப்புகின்றார்களா என்பதை அவர்கள் அறிய உதவிட இறகுகளைப் பயன்படுத்தினார்.






அ லெ க் பள்ளி முடிந்ததும் தனது வீட்டிலும் மாணவர்களுக்கு கற்பித்தார். இதன் மூலம் ஒலியுடன் அதிக பரிசோதனைகள் செய்ய அவருக்கு கூடுதல் பணம் கிடைத்தது. இரவில், அ லெ க் தனது ஒலி பற்றிய சோதனைகளைச் செய்ய பலதடவை வெகு நேரம் விழித்திருந்தார்.



மனிதக் குரலை கம்பிகள் வழியாக அனுப்புவதற்கு ஒரு வழியைக் கண்டுபிடிக்க **அலெக்** முயன்றவாரிருந்தார். அது வெகு தொலைவில் உள்ளவர்கள் ஒருவருக்கொருவர் பேச வழிவகுக்கும்.

**அலெக்** கண்டுபிடிப்பை துரிதப்படுத்த வேண்டும் என்று அறிந்தார். பல விஞ்ஞானிகள் கம்பிகள் மூலம் பேச்சை எவ்வாறு அனுப்புவது என்பதைக் கண்டுபிடிக்க முயன்றனர். **அலெக்** தான் முதலாவதாக இருக்க விரும்பினார்!





அ லெ க் ,  தா ம ஸ்  வா ட் ச ன்  என்பவரை தனக்கு உதவியாளராக வேலைக்கு அமர்த்தினார். இருவரும் கிட்டத்தட்ட எல்லா இரவுகளிலும் பரிசோதனைகளை மேற்கொண்டனர். தந்திகள் வழியாக மனித குரலை அனுப்புவதை அடைவதில் நெருங்கிவிட்டனர்! மார்ச் 10, 1876 இல், அ லெ க்  ஒரு அறையில் இருந்தார். அவர் மற்றொரு அறைக்கு கம்பி மூலம் இணைக்கப்பட்ட பேசும் முனையை வைத்திருந்தார். அங்கே, அ லெ க்  பேசும் முனையில் பேசும் சொற்களை பெற தா ம ஸி டம் உபகரணங்கள் இருந்தன.

"மிஸ்டர் வா ட் ச ன்  - இங்கே வாருங்கள் - நான் உங்களைப் பார்க்க விரும்புகிறேன்," என்றார் அ லெ க் . தா ம ஸ்  உள்ளே ஓடி வந்தார். அ லெ க் கின் வார்த்தைகளை அவர் கேட்டிருந்தார். அவை தந்தி வழியாக பயணித்திருந்தன. அதுவே அ லே க்  அனுப்பிய முதல் தொலைபேசி செய்தியாகும்!







அந்த கோடையின் பிற்பகுதியில், **அ லெ க்** தனது பெற்றோரை **பி ரா ண் ட் ஃ போ ர் டி ல்** சந்தித்தார். ஆகஸ்ட் 3 ஆம் தேதி, அவர் தனது கண்டுபிடிப்பை அருகிலுள்ள **ம வு ண் ட் ப் ளெ ச ண் ட்** நகரில் அமைத்தார். அன்று இரவு, அங்குள்ள மக்கள் சுமார் 8 கி.மீ (5 மைல்) தொலைவில் உள்ள **பி ரா ண் ட் ஃ போ ர் டி ல்** உள்ள மக்கள் பேசுவதைக் கேட்டார்கள். எல்லோரும் ஆச்சரியமடைந்தார்கள்.





ஆகஸ்ட் 10 அன்று, **அ லெ க்** கின் நம்பமுடியாத கண்டுபிடிப்பைக் காண மக்கள் **ஒ ன் டா ரி யோ** வின் **பா ரி ஸி ல்** கூடினர். விரைவிலேயே அவர்கள் சுமார் 13. கி.மீ (8 மைல்) தொலைவில் உள்ள **பி ரா ண் ட் ஃ போ ர் டி லு ள் ள** மக்களின் குரல்களைக் கேட்டார்கள். **அ லெ க்** கின் தொலைபேசி வெற்றியடைந்தது!

முதலில், சிலருக்கு தொலைபேசி பிடிக்கவில்லை. அது புதியது, மேலும், அவர்களுக்கு அது புரியவில்லை. இது கிருமிகளைப் பரப்புமோ என்று அவர்கள் சந்தேகப்பட்டார்கள். வேறு சிலர், தொலைபேசியை பயன்படுத்தாவிட்டாலும், அவர்கள் பேசுவதையெல்லாம் தொலைபேசி கேட்டுக்கொண்டிருக்குமோ என்று கவலைப்பட்டனர்! **அலெக்** தனது கண்டுபிடிப்புடன் மக்கள் பழகுவதற்கு உதவ விளக்க நிகழ்ச்சிகளை நடத்தினார்.





**அலெக்** தொலைபேசியில் தொடர்ந்து பணியாற்றினார். அவர் - அவரது மாணவர்களில் ஒருவரான **மாபெல் ஹப்பார்ட்** என்ற இளம் பெண்ணுடன் காதல் வயப்பட்டார்.



மா பெ ல் காது கேளாதவர், ஆனால் அவள் மக்களின் உதடுகளைப் பார்ப்பது அவர்கள் சொல்வதை அறிவது எப்படி என்று கற்றுக்கொண்டாள். அ லெ க் மற்றும் மா பெ ல் இரவில் நடைபயிற்சிக்குச் சென்றபோது, அவர்கள் அதிக நேரம் தெருவிளக்குகளின் கீழ் நின்றனர். பேசும் போது அ லெ க் கின் உதடுகளைப் பார்க்க மா பெ லு க்கு ஒளி தேவைப்பட்டது. இந்த ஜோடி சாரட்டு வண்டியில் பயணம் செல்லும்போது, மாபெல் ஒரு மெழுகுவர்த்தியைக் கொண்டு செல்வார்.





அ லெ க் மற்றும் மா பெ ல் விரைவில் திருமணம் செய்து கொண்டனர். அவர்களுக்கு எ ல் சி மற்றும் ம ரி ய ன் என்ற இரண்டு மகள்கள் இருந்தனர்.



1885 ஆம் ஆண்டில், அ லெ க் கும் அவரது குடும்பத்தினரும் கனடாவின் நோ வா ஸ் கொ ட் டி யா வி ல் உள்ள கே ப் பி ரெ ட் ட ன் தீவில் கோடைகாலத்தை செலவிடத் தொடங்கினர். அவர் அங்கு ஒரு பெரிய வீட்டைக் கட்டினார். அது பதினொரு கணப்படுப்புகள் கொண்ட அளவுக்கு பெரியதாக இருந்தது! அவர் மேலும் கண்டுபிடிப்பதற்கு வசதியாக, அ லெ க் ஒரு ஆய்வகத்தையும் கட்டினார்.



அ லெ க் தனது கோடைகால வீட்டில் ஓய்வெடுப்பதை விரும்பினார். அருகிலுள்ள ஏரியில் யோசித்தவாறே மணிக்கணக்கில் மிதக்க அவர் விரும்பினார்.



அ லெ க்  கண்டுபிடிப்புகளைத் தொடர்ந்தார். மக்கள் எவ்வளவு நன்றாகக் கேட்க முடியும் என்பதை சோதிக்க ஒரு இயந்திரத்தை உருவாக்கினார். அவர் ஒரு ஏர் கண்டிஷனர், ஒரு பனிப்பாறை கண்டுபிடிப்பான் மற்றும் மேலும் பலவற்றையும் கண்டுபிடித்தார். அ லெ க் விமானங்களைக் கூட  கட்டமைத்தார்.





இப்போது அ லெ க்  தனது கண்டுபிடிப்புகளால் நன்கு அறியப்பட்டவரானார். சில நேரங்களில் அவர் தனது மிகவும் பிரபலமான கண்டுபிடிப்பான தொலைபேசியால் நொந்துபோனார். அ லெ க்  அடிக்கடி தனது தொலைபேசியின் ஒலி கேட்காதவாறு ஒரு துண்டைக்கொண்டு சுற்றி வைத்தார். "இப்போது தான் ஒரு மனிதன் சிந்திக்க முடியும்!" என்பார் அவர்.



1915 ஆம் ஆண்டில், அ லெ க் , வட அமெரிக்கா முழுவதும் கடந்த முதல் தொலைபேசி அழைப்பை செய்தார். நி யூ யா ர் க் கில் இருந்து, க லி போ ர் னி யா வின் சா ன் பி ரா ன் சி ஸ் கோ வில் உள்ள தனது நண்பர் தா ம ஸ் வா ட் ச னை அழைத்தார். "மிஸ்டர் வா ட் ச ன் இங்கே வாருங்கள் - நான் உங்களைப் பார்க்க விரும்புகிறேன்!" என்றார் அ லெ க் . அங்கு வருவது எனக்கு மகிழ்ச்சியாளிக்கும் என்றார் தா ம ஸ் . ஆனால் இப்போது அது அதிக நேரமெடுக்கும்!





அ லெ க் 1922 இல் மரணமடைந்தார். அவரது இறுதி ஊர்வலத்தின் போது, வட அமெரிக்கா முழுவதும் உள்ள தொலைபேசி நிறுவனங்கள் அனைத்து தொலைபேசிகளையும் அணைத்து வைத்தன. இது அ லெ க் கையும், உலகை மாற்றிய ஒரு கண்டுபிடிப்பான அவரது தொலைபேசியையும் மக்கள் ஒருபோதும் மறக்க மாட்டார்கள் என்பதைக் காட்டுவதற்காகும்.



## அலெக் பற்றிய கூடுதல் தகவல்கள்

- அலெக் மார்ச் 3, 1847 இல் பிறந்தார். அவர் ஆகஸ்ட் 2, 1922 இல் இறந்தார்.
- அலெக் தொலைபேசியில் பதிலளித்தபோது, "*ஹலோ*!" என்று சொல்வதற்கு மாறாக "*ஹோய்*! *ஹோய்*!" என்பார்.
- அலெக் ஹெலன் கெல்லரின் நல்ல நண்பராக இருந்தார். அவர் காது கேளாத மற்றும் பார்வையற்ற ஒரு பிரபல எழுத்தாளர் மற்றும் பேச்சாளராவார்.
- பிராண்ட்போர்டில் அலெக் வாழ்ந்த வீட்டை நீங்கள் பார்வையிடலாம். அலெக்சாண்டர் கிரஹாம் பெல் தேசிய வரலாற்று தளத்தையும் நீங்கள் பார்வையிடலாம். அது அங்குள்ள அலெக்கின் வீட்டிற்கு அருகிலுள்ள கேப் பிரெட்டன் தீவில் உள்ளது.



**முற்றும்**